உ

சளுக்கிய

# விக்கிரமாதித்தன் சரித்திரம்.



இது

சென்னை மேரிராணியார் மாதர்கலாசாலைச்

சரித்திரபோதகாசிரியராகிய

**அ. வா. வேங்கடராம ஐயர், M. A., L. T.,**

அவர்களால் எழுதப்பெற்று,



டாக்டர். உ. வே. ... நூல் நிலையம், சென்னை - 600090.

கோ. அபிராம ஐயரால்

சென்னைக் கமேர்ஷியல் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

All Rights Reserved.] 1922. [விலை ரூபா 1.

*IN SACRED MEMORY OF*

*MY FATHER*

**ANAPPATTUR VANCHI KRISHNA AYYAR.**

# FOREWORD.

The following essay treats of the life and times of Vikramaditya VI of the dynasty of the Chalukyas of Kalyani. He was the last great ruler of the dynasty and was undoubtedly the greatest of the later Chalukyas. He is the hero of the Sanskrit epic Vikramankadevacharitam of Bilhana, his own Vidyapathi. The period of his rule was one of the most important in South Indian History, as the whole of India south of the Vindhyas was divided between two great rulers Vikramaditya VI and the Chalukya-Chola Kulottunga I. It is this pair that constituted the subject of my paper "Two Empires Towards Their Fall" which appeared in the Madras Review about the year 1906. This paper was included in my presidential address to the South Indian Association on the Cholas. Since then there has been a certain amount of fresh accession of matter, and even the matter that was available to me was capable of more elaborate collation and a fuller study. Mr. A. V. Venkatarama Aiyar took up the subject for his M. A. thesis submitted for the examination of 1912. He has since been at the same subject, revising and reconsidering points at issue and took occasion to publish the paper in a more elaborate form in the Indian Antiquary where a part of it has already appeared. The following is a Tamil version of his study of the history of the period. I have had occasion to see this work in the English form in various stages of its growth and it is a good idea of the author to publish it in Tamil as well. He has gone into the whole subject in true scholarly spirit and has done his best to solve the many doubtful points connected with the remarkable career of this sovereign whose epoch-making reign covered almost the half-century of that of his great Chola contemporary. Mr. Venkatarama Aiyar's achievement deserves praise as an attempt worthy of the theme. It is to be hoped that he will have adequate public reception to encourage him to further efforts in similar studies.

MADRAS UNIVERSITY
*29th Septemher, 1922.*

S. KRISHNASWAMI AIYANGAR,
M.A., HON. PH.D., F.M.U.,
*Professor of Indian History.*

# முகவுரை.

நமதுநாட்டில் சரித்திரவிஷயமாக எழுதப்பட்ட நூல்கள் சிலவேயாகும். அவற்றுள்ளும் தேசபாஷைகளில் வெளிவந்தவை மிகச்சில. ஆதலால் அக்குறையை ஒருவாறுநீக்க, இதுகாறும் வெளிவந்த சாசனங்களையும் நூல்களையும் ஆதாரமாகக்கொண்டு இச்சிறு நூலை எழுதத்துணிந்தேன். இதிற் பின்சளுக்கிய சந்ததியிற் பிரசித்தி பெற்ற விக்கிரமாதித்தனைத் தலைவனாகக்கொண்டு அப்பரம்பரையாரின் சரிதமும் நாகரிகமும் ஆங்காங்கு ஆதாரங்களுடன் விவரிக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு வமிசத்திலும் பிரபலமான ஒருவனை நடுநாயகமாகவைத்து, முன் பின்வர்த்தமானங்களையும் காலநிலைமையையும் ஒழுங்குபடச்சேர்த்து தக்கஆதாரங்களுடன் ஆராய்ச்சிநூல்கள்பல எழுதப்படின் நமதுதேசத்தின் உண்மையான சரித்திரம் நாளடைவில் ஏற்பட அனுகூலமாகுமென்பது என்கருத்து.

இந்தியசரித்திர ஆராய்ச்சிவிஷயத்திற் போதிய ஆதாரமின்மையால் அபிப்பிராயபேதங்களுக்கு இடமுண்டு. ஆகையால் முன்னோர்கொள்கைகளில் சிற்சில மாறுபாடடைந்து இந்நூலிற்காணப்படும். 'பழையன கழிதலும் புதியன புகுதலும்' ஆராய்ச்சியின் இயல்பன்றோ? ஆயினும் என் அபிப்பிராயங்கள் யாவர்க்கும் எக்காலத்தும் ஒப்பமுடிந்தவை என்று சாதிக்கவந்தவனல்லேன்.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

பலவருடங்களுக்குமுன் M. A. பரீக்ஷைக்கு (1912) ஆங்கிலத்தில் சளுக்கிய விக்கிரமாதித்தனைப்பற்றி ஒரு சிறுவியாசம் எழுதினேன். அதனுடைய சிலபாகங்கள் பிறகு இந்திய ஆராய்ச்சிப் பத்திரிகையில் (Indian Antiquary — 1919) வெளிவந்தன. வேறுசில அம்சங்கள் புனா கல்கத்தாநகரங்களில் நடைபெற்ற வித்வத்சமூகங்களில் (1st and 2nd Oriental Conferences, 1919 and 1921) படிக்கப்பட்டு அங்கீகரிக்கப்பட்டன. 1919-ம்வருஷத்தில் அவ்வியாசத்தைச் 'செந்தமிழ்' வாயிலாக வெளியிட்டேன்.

# முகவுரை.

சென்னை சர்வகலாசாலைப்பாட நிர்ணயசங்கத்தார் (Board of Studies) பரீக்ஷா (Intermediate Examination, 1923) பாடங்களுள் ஒன்றாக இந்நூலைத் தேர்ந்தெடுத்தனர்; அச்சங்கத்தாருக்கு மிக்க நன்றிசெலுத்துங்கடப்பாடுடையேன்.

முதலில் ஆராய்ச்சிசெய்தபோது எனக்குப் பேருதவி புரிந்தவர் ம-௱-௱-ஸ்ரீ நா. நி. நரசிங்கராவ் அவர்கள் B.A., L.T. ஆங்கிலத்திலிருந்து தமிழில் எழுதியபோது உடனிருந்து உதவியவர் காலஞ்சென்ற அ. ராகவையர், M.A., L.T. அவர்களது நன்றி என்றும் மறக்கற்பாலதன்று.

இவ்விஷயத்தைப்பற்றி ஆராய்ச்சி செய்யும்படி முதலில் தூண்டியவரும், என் வேண்டுகோளுக்கு இணங்கி இந்நூலுக்கு முன்னுரை அன்புடன் எழுதிக்கொடுத்த பேரறிஞருமாகிய ம-௱-௱-ஸ்ரீ S. கிருஷ்ணசாமி ஐயங்கார் M.A., Hon. Ph.D., F.M.U. அவர்களுக்கு என் மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்துகின்றேன்.

வியாசத்தைப்பாராட்டி தமது அபிப்பிராயங்களைத் தெரிவித்து என்னை ஊக்கிய பேரறிஞர் பலருக்கும், ஆங்காங்கு சிற்சில விஷயங்களை எடுத்துக்காட்டி அச்சிடும்போது உதவிசெய்த என் தலைமையஞர் ம-௱-௱-ஸ்ரீ வாஞ்சி இராமசுவாமி ஐயரவர்கட்கும் மற்றும் பலநண்பருக்கும் அநேக வந்தனம்.

மயிலாப்பூர், 1922௵ செப்டம்பர்௴. இங்ஙனம், அ. வா. வேங்கடராம ஐயர்.

# பொருளடக்கம்.

## முதல் அத்தியாயம்.



## இரண்டாம் அத்தியாயம்.



## மூன்றாம் அத்தியாயம்.



## நான்காம் அத்தியாயம்.

## பொருளடக்கம்.



---

# சளுக்கிய விக்கிரமாதித்தன் சரித்திரம்.

## முதல் அத்தியாயம்.

### விக்கிரமாதித்தனுடைய முன்னோர்கள்.

**சளுக்கியரின் பெயர்.**

சளுக்கியரென்பவர் சாளுக்கியர், சௌளுக்கியர், சுளுக்கியர், சளுக்கர், சலிக்கியர், சல்கியர், சோலங்கீ, சோலகி என்று பலவிதமாக நூல்களிலும் சாசனங்களிலும் கூறப்பட்டிருக்கின்றனர்.

**சளுக்கியரின் பெயர்க்காரணமும் புராதன வரலாறுகளும்.**

பிரமதேவர் சந்தியாவந்தனஞ் செய்து கொண்டிருக்கையில், தேவேந்திரன் ஒரு சமயம் அவரிடம் வந்து பூலோகத்தில் பாவம் அதிகரித்து வந்ததனால் துஷ்டநிக்கிரகம் செய்யத்தகுந்த ஒருவீரனைச் சிருஷ்டிக்கும்படி அவரைப் பிரார்த்திக்க, அவர் அப்போது தம் சுளுகத்தை (ஆசமனத்துக்காகக் குவித்த உள்ளங்கை) நோக்க, அதிலிருந்து சுளுகன் என்ற வீரனுண்டானனென்றும், அவனுடைய பரம்பரையாருக்குச் சௌளுக்கியர் அல்லது சளுக்கியர்என்றபெயர் வழங்கலாயிற்றென்றும் விக்கிரமாங்கதேவசரிதத்தில்[1] பில்ஹணர் கூறியிருக்கிறார். ஹந்தார்க்கி சாசனத்திலும்[2] இவ்வரலாறே காணப்படுகிறது. இவைகளுக்குச் சற்று மாறுபாடாக, ஹேஹய என்னும் கலசுரிகுலத்தைச் சார்ந்த இரண்டாவது யுவராஜனது சாசனத்தில்[3], துரோணாசாரியார் தம்மைப் பாஞ்சாலதேசத்து அரசனாகிய துருபதன் அவமதிக்க, அவனைச்சபித்தபோது அவருடைய சுளுகத்திலிருந்து சளுக்கியர் உற்பத்தியாயினரென்று சொல்லப்பட்டிருக்கிறது. மற்றோரிடத்தில்[4] அவர்கள் வடதேசத்துமுனிவர் ஹாரீதிபஞ்சசிகரது சுளுகத்திலிருந்து தோன்றினவராகக் கூறப்பட்டிருக்கிறார்கள். இவ்வேறுபாடுகளுள்ள

1 விக். சரி. அத். I. சு. 31-56.
2. J. R. A. S. IV. 8.
3. Epi. Ind. I. 257.
4. Ind. Ant. VII. 74; Bom. Gaz. IV. 339.

வரலாறுகளால் 'சளுகம்' என்னும் பதத்தைக்கொண்டே ச( ளு ம.
ரின் பெயர்க்காரணம் கற்பிக்கப்பட்டதென்பது தோன்றுட . ஷ
யன்றி, சரித ஆராய்ச்சிமுறையில் யாதொன்றும் விளங்கினபாடில்லை.

**சளுக்கியரின் குலம்.**

தங்களுடைய மெய்க்கீர்த்திகளில்[1] சளுக்கியர் தங்களைச் ( ரமா குலத்தினரென்றும், ஹாரீதிபுத்திரரென், மானவியகோத்திரத்தாரென்றும், சத்தி சிரயகுலதிலகரென்றும் சொல்லிக்கொண்டிருக்கின்றனர். சந்த் ( 6) தாயின் (Chand Bardai) 'பிருதிவி ராஜராய்ஸா'[2] என்னும் நூ அவர் அக்கினிகுலத்தினரென்று சொல்லப்பட்டிருக்கின்ற ஆனால் சாசனங்களிலும் வேறுபல நூல்களிலும் இவ்வாறு ெ யுத்த பட்டிராமையாலும் இதற்குப் போதுமான ஆதாரம் காட்ட கிராம மையாலும் இதைத் துணிந்துரைக்க இடமில்லை [3].

சளுக்கியர் வேள்குலத்தவரென்று ஸ்ரீமான். மு. ராமான் வையங்காரவர்கள்[4] அபிப்பிராயப்படுகிறார்கள். அதற்கு கூறும் முக்கிய ஆதாரங்களாவன: 'தார காரியுஞ் சளுக்கிய னும் வேளி வாளனும் வேளென லாகும்' என்னும் பிங் யும், 'வேள்புல அரசர் சளுக்கு வேந்தர்', 'கேழல் வேள்புராதமில் கொடியே' என்னும் திவாகரமும், 'வேள்குலத்தரசர்', 'வே சளுக்கியர்' என்னும் பிற்காலத்துச் சோழசாசனங்களுமே வேள் என்ற சொல்லடியாக வழங்கிவரும் வேளாளர் எ குலப்பெயரும், வேள்புலம், வேளூர், வேளூரகம், வேள மூது வேளகம், வேள்பாடி முதலிய ஊர்ப்பெயர்களும் இதனை கல்வி யுறுத்துமென்பர் [6]. தமிழ்நாட்டில் வேளிர் என்பார் குறு ளராயிருந்தனரென்பது யாவர்க்கும் ஒப்பமுடிந்தது. இ வேளிர் என வழங்கப்பட்டதற்குக்காரணங்கள் முடியுடைவேந்த விருப்பத்துக்கு உரியவராயிருந்தனரென்பதும், யாகசமயத்திற்

1. Hemachandra's Dwasraya Kosha; Jinaharshana's Vastupalacharita; கடக்சாசனம், Ind. Ant. XXI. 167; கொரிமல்லிசாசனம், Ind. Ant. XIV. 50-55.
2. Tod's Rajasthan; Ojha's History of the Solankis.
3. Ind. Ant. XL. 25.
4. வேளிர்வரலாறு, 9.
5. S. I. I. III. Nos. 28, 73.
6. வேளிர்வரலாறு, 14.

ன்றினரென்பதும், நிலத்தை உழுதுபயிரிட்டுவந்தனரென்ப
ம், ஏனையோர்க்கு அன்னமளித்துப்புரக்கும் அரியவுபகாரச்
செயலுடையரென்பதும் முதலாய பலவகையினவாகக்கூறப்படுகின்
ன[1]. ஆனால் இவைகளெல்லாம் வேளென்னும் பதத்திற்கு அகரா
தியிற்காணப்படும் பல பொருள்களைக்கொண்டு வேளிருக்கு வரலாறு
கூறப்படுவதேயன்றிச் சரித்திர சம்மதமானவை என்று அங்கீகரிக்க
இடமில்லை. இனி, புறநானூறு 201-ம் செய்யுளில் 'வடபான் முனி
வன் தடவினுட் டோன்றி.........நாற்பத் தொன்பது வழிமுறை
வந்த வேளிருள் வேளே' என்று இருங்கோவேள் சொல்லப்பட்
டிருக்கிறான். இங்கே 'வடபான் முனிவன் தடவினுட்டோன்றி' என்
பதற்கு, புறநானூற்று உரையாசிரியர் 'கதையுரைப்பிற்பெருகும்;
கேட்டுணர்க' என்றெழுதி, 'தடவு' என்பதற்கு ஓமகுண்ட
மென்று பொருள்கூறியிருக்கிறார். இதை அங்கீகரிப்போமாயின்
சளுக்கியர் அக்கினிகுலத்தவரென்பதே யுசிதமாகும். ஆனால் அவ்
சளுக் துணிதற்கிடமில்லையென்று மேலே கூறியுள்ளோம். யாக
பெயர்க் (வி) சமயத்தில் தோன்றினரென்னும் கதைகளுக்கியைய,
பு ' என்பதற்கு யாகபாத்திரம் என்று பொருள் கூறுவதே
வரலா ந்துமென்று ஸ்ரீமான். மு. இராகவையங்காரவர்கள்[2] அபிப்
குவித்த ப்படுகின்றார்கள். ஆனால், 'தடவு' என்பதற்கு, 'தடவென் கிளவி
னுண்ட டமுஞ் செய்யும்' என்னும்தொல்காப்பியச் சூத்திரப்படி[3],
கியர் மொழியில் சளுகமென்று குறிப்பிட்ட) குவிந்த உள்ளங்கை என்
கிரமா பொருள்கொள்ளுதல் மேற்கூறிய பல புராதன வரலாறுகளு
சாசன ஒப்பமுடிவதாகும்.
சற்று
இரா சளுக்கியர் கூஜர் குலத்தைச் சார்ந்தவரென்று ஸ்ரீமான்.
த. ரா. பண்டாரகர்[4] (D. R. Bhandarkar) அபிப்பிராயப்படு
கிறார். இவர்கள் வெளிநாட்டிலிருந்துவந்து குடியேறினதனாலேயே
அதுவரையில் லாட என்று வழங்கிவந்த நாடானது கூஜர்
ராஷ்டிரம் (குஜராட்) எனப் பெயர் மாறலாயிற்றென்பர். ஆனால்

1. ந. மு. வேங்கடசாமி நாட்டாரின் வேளிர்வரலாற்றின் ஆராய்ச்சி, 20, 21, 27.
2. வேளிர்வரலாறு, 12.
3. சொல்லதிகாரம், உரிச்சொல்லியல், 23.
4. Ind. Ant. XL. 24 - 44.

இதற்குச் சாசனமூலமான ஆதாரம் ஒன்றுமில்லையென்று அவரே ஒப்புக்கொள்ளுவதனாலும் லாட என்னும் பெயர் கூர்ஜரத்தின் ஒரு பாகத்திற்கு அவர் குடியேறின பின்பும் வழங்கிவந்தமையாலும் அதை அங்கீகரிப்பது கூடாததாகும். மேலும் குஜராட் என்னும் நாட்டின் பெயரைக்கொண்டே அதிற்குடியேறினவர்களின் குலத்தை நிர்ணயிப்பது சரியல்ல.

**சளுக்கியரது ஆதிஇருப்பிடம்.**

சளுக்கியர் ஆதியில் குடியேறினது சவலாக் (ஒன்றேகால் இலக்ஷம்) பர்வதத்தைச் சார்ந்த சபாதலக்ஷத்துத் தலைநகராகிய அஹிச்சத்திரமென்று தே. ரா. பண்டாரகர்[1] சாசன ஆதாரங்களைக் கொண்டு நிரூபித்திருக்கிறார். முதலில் அரசாளத் தொடங்கியது அயோத்தியிலென்றும் இதரதேசங்களை ஜயிக்கவேண்டித் தெற்கே வந்தனரென்றும் பில்ஹணர்[2] சொல்லுகிறார். அயோத்தியில் ஐம்பத்தொன்பதின்மர் ஆண்டனரென்றும், பின்னர் பதினறு அரசர் அயோத்திக்குத் தென்தேசமாகிய கங்காதீரத்தையும் சேர்த்து ஆண்டனரென்றும் மிராஜ்[3] கௌதம்[4] ஏவூர்ச்[5] சாசனங்கள் விரிவாகக் கூறுகின்றன. ஆகையால் சளுக்கியர் வடதேசத்திலிருந்து தெற்கு நோக்கி வந்தனரென்பது நிச்சயமாக விளங்குகிறது.

**முன் சளுக்கியர். (கி. பி. 550-753)**

சளுக்கியரில் முதலிற்கீர்த்திபெற்று விளங்கினவன் சத்தியாசிரய ஸ்ரீபுலகேசிவல்லப மகாராஜன். அவன் நருமதையைக்கடந்து வாதாபி (நிஜாம் ராஜ்யத்து பாதாமி) புரத்தை ராஜதானியாக்கிக்கொண்டான். அவனுடைய பேரனாகிய இரண்டாம்புலகேசியின் காலத்தில் (கி. பி. 609-642) இக்குலம் உயர்ந்தோங்கி விளங்கிற்று. இவன் தென்தேசத்தில் பல்லவர்களின் பலத்தை ஒடுக்கி, அசுவமேதம் செய்து துங்கபத்திரைநதி தொடங்கி வடக்கே நருமதைக்கரைவரையில் ஏகசக்கராதிபதியாக விளங்கினான். இப்பரம்பரையரசர்களில் இவனே ஒப்புயர்வற்றவன். சீனதேசத்து யாத்திரிகராகிய

1. Ind. Ant. XL. 24 - 44.
2. விக். சரி. I. 63-65.
3. Ind. Ant. VIII. 18.
4. Ind. Ant. XVI. 23.
5. Ind. Ant. VIII. 15.

யுவான் ச்வாங் (Yuan Chwang) என்பவரும் சளுக்கியரின் பராக்கிரமத்தை மெச்சி, நருமதைக்கப்பால் வடஇந்தியாவில் கன்யாகுப்ஜத்தை (கானோஜ்) ராஜதானியாகக்கொண்டு ஏகசக்கராதிபதியாக விளங்கின சீலாதித்தன் என்னும் ஹர்ஷவர்த்தனனை, தென்னாட்டிற்கு வரவொட்டாமல் புலகேசி தடுத்துவிட்டதாகச் சொல்லியிருக்கிறார். இப்புலகேசியின் காலத்திலேயே இவன் தம்பியாகிய குப்ஜவிஷ்ணுவர்த்தனன் கோதாவரி கிருஷ்ணாநதிதீரமாகிய வேங்கிநாட்டின்மேற் படையெடுத்துச்சென்று அதனை ஜயித்து, கீழைச்சளுக்கியநாடொன்றை ஏற்படுத்தினான். இதற்கு ஒரு நூற்றாண்டுக்குப்பின்னர், சுமார் கி. பி. 753-ல் இரண்டாம் கீர்த்திவர்மன் ராஷ்டிரகூடகுலத்தைச் சேர்ந்த தந்திதுர்க்கனால்தோல்வியடைய, சளுக்கியகுலம் பலக்குறைவுற்றது.

**ராஷ்டிரகூடர். (கி. பி. 753-973)**

அதுமுதல் கி. பி. 973 வரையில் இரண்டுநூற்றாண்டுகளுக்கு அதிகமாக, ராஷ்டிரகூடர்கள் தக்ஷிணத்தில் பிரதான அரசர்களாக இருந்தார்கள். அப்போது சளுக்கியர் பலகிளையினராகப்பிரிந்து ராஷ்டிரகூடர்களின் ஆட்சியின் கீழ்ச் சிற்றரசர்களாக இருந்தார்கள் [1].

**பின்சளுக்கியர். (கி. பி. 973-1190)**

ராஷ்டிரகூடகுலத்துப் பதின்மூன்றும் அரசனாகிய கொட்டிகனதுநாளில், பரமாரகுலத்து மாளவதேசத்தரசனாகிய ஸ்ரீஹர்ஷன் என்னும் சீயகன் கி. பி. 972-ல் தக்ஷிணதேசத்தரசர்களைத்தாக்கித் தலைநகராகிய மாணியகேடத்தையும் (நிஜாம்ராஜ்யத்து மால்கேட்) கொள்ளையடித்தான் [2]. கொட்டிகனுக்கு மருமகனாகிய கற்கரனது காலத்தில் அதுவரையிற் சிற்றரசராயிருந்த சளுக்கியரின் தலைவனாகிய தைலபன் இதுதான் தக்கசமயமென்றுகருதி, சற்றேறக்குறைய கி. பி. 973 - ல் கக்கலனையும் (கற்கரனை) ரணஸ்தம்பனையும் [3]

---

1. Ind. Ant. XII. 11; Ind. Ant. XL. 41; Epi. Car. XI. Cl. 15; Epi. Report. 1904.

2. உதயபுரசாசனம், Epi. Ind. I. 235.

3. 'ரணஸ்தம்ப' என்னும் பதத்திற்கு ஓரிடமென்று டாக்டர்எலியட்டும் (Dr Elliot) ஜயஸ்தம்பம் என்று டாக்டர் ப்ளீட்டும் (Dr Fleet) பொருள் கொள்ளுகின்றனர். இவை தவறு. அது, கக்கலன் உறவினனாகிய ஒருவன் பெயராகவே இருத்தல்வேண்டும். Cf. ரணராகன். மிராஜ். கௌதம், ஏலூர்ச் சாசனங்களின் சுலோகம் பார்க்க.

வென்று ராஷ்டிரகூடகுலத்து ஜாகவ்வா என்பவளை மணம்புரிந்து சளுக்கியகுலத்தின் கீர்த்தியை மறுபடியும் நிலைநாட்டினன்[1]. இவனும் இவன் பரம்பரையாரும் பின்சளுக்கியரெனப்படுவர்.

**முன் பின் சளுக்கியரின் சம்பந்தம்.**

அவர் சளுக்கியகுலத்தைச்சேர்ந்தவரேயாயினும் முன்சளுக்கியரின் நேரான மரபினரல்லரென்றும், வேறொரு சிறு கிளையினர் என்றும் ஸ்ரீமான். ரா. கோ. பண்டாரகர் (R. G. Bhandarkar) அபிப்பிராயப்படுகிறார்[2]. ஆனால் அவர் இதற்கென்றுகூறிய இருகாரணங்களும் பொருந்தாவாம். அவர் கூறும் முதற்காரணம்:—'முன்சளுக்கியர் தங்களை ஹாரீதிபுத்திரரென்றும் மானவியகோத்திரத்தாரென்றும் சொல்லிக்கொள்ள, பின்சளுக்கியரோ தங்களைச் சத்தியாசிரயகுலத்தவரென்று சொல்லிக்கொள்ளுகின்றனர்' என்பதேயாம். இஃது ஒவ்வாது: ஏனெனில், முன் சளுக்கியரில் ஏறக்குறைய எல்லா அரசர்களுக்கும் சத்தியாசிரயன் என்கிற பிருது வழங்கி வந்திருக்கிறது[3]. மேலும் பின்சளுக்கியரும் தங்களை ஹாரீதிபுத்திரரென்றும் மானவியகோத்திரத்தாரென்றும் சொல்லிவந்தனரென்பது மிராஜ், கௌதம், ஏவூர்ச்சாசனங்களால் நன்கு வெளியாகிறது. ஆகையால் ஹாரீதிவமிசமும் சத்தியாசிரயகுலமும் ஒரேசந்ததியாக இருத்தல் வேண்டுமெனபது ஊகிக்கக்கிடக்கின்றது. இதைத் துணிந்துரைக்கவும் இடமுண்டு; ஏனெனில் கன்னட ரன்னகவியின் சளுக்கியவமிசாவளியிலிருந்து[4] முன்சளுக்கியருக்குச் சத்தியாசிரயன் என்ற ஒரு மூலபுருஷனிருந்ததாக வெளியாகிறது. இச்சத்தியாசிரயனே அயோத்தியில் ஆண்டானென்றும், அவனே ஹாரீதிபுத்திரனென்றும், அதுபற்றியே அவன் மரபினர்க்குச் சத்தியாசிரயகுலதிலகரெனப் பெயர்வழங்கலாயிற்றென்றும் இத்தகி சாசனத்தால்[5]

1. குண்டூர்ச்சாசனம், Ind. Ant. XII. 270 - 271; கடச்சாசனம், Ind. Ant. XXI. 167-168; ஏவூர்சசாசனம், Ind. Ant. XIII. 15; கௌதம் சாசனம், Ind. Ant. XVI. 23; J. R. A. S. IV. 12.

2. Early Hist. of the Dekkan, 44,58.

3. Bom. Gaz. Part. II. Ch. II.

4. Ind. Ant. XL. 43-44.

5. ' Epi. Ind. XIII. No. 4. verse. 21; இங்குக் குறிக்கப்பட்ட சத்தியாசிரயன் டாக்டர் பார்னெட் (Dr Barnett) நினைக்குமாறு புலகேசியாகான்.

நன்கு விளங்குகிறது. நிற்க, "பின் சந்ததியாரின் 'மல்ல' பிருது முன்சந்ததியார் பெயர்வரிசையில் காணப்படவில்லை" என்னும் பண்டாரகரது இரண்டாம் வாதமும் பொருந்தாது; ஏனெனில் முன்சளுக்கியருள்ளும் விக்கிரமாதித்தன் வினயாதித்தன் என்ற இருவருக்கும் முறையே ராஜமல்லன், யுத்தமல்லன் என்னும் பிருது உளது [1]. இம்மல்ல பிருதே பின்னிட்டு விசேஷித்து வழங்கலாயிற்று. மேலும் இவ்விருவகையாருக்கும் மகாராஜாதிராஜன், பரமேசுவரன், பட்டாரகன், பரமபட்டாரகன், பிருதிவீவல்லபன் என்னும் அநேக வேறு பிருதுகள் பொதுவாக வழங்கிவந்திருக்கின்றன. ஆகிலும் பிருதுகளின் ஒற்றுமை வேற்றுமைகளைக்கொண்டே குலங்களின் தொடர்ச்சியுண்மையையோ இன்மையையோ நிச்சயிப்பது சரியல்ல. மேற்கூறியபடி முன் பின் சளுக்கியரனைவரும் ஒரேகுலத்தின ரென்று கொள்ளுவதே உசிதமாம் [2].

**கி-:பி. பதினோராம் நூற்றண்டின் தக்ஷிண நிலைமை.**

இனி, கி.பி. பதினொராம்நூற்றாண்டின் தொடக்கத்தில் தக்ஷிண தேசங்கள் இருந்த நிலைமையைக் கூறுவாம். மாளவதேசத்துப் பரமாரகுலத்து ஸ்ரீஹர்ஷ ராஜனால் ராஷ்டிரகூடருடைய ராஜ்யம் நிலைகுலைய, தைலபனை முன்னிட்ட சளுக்கியர் ஓங்கினர். துங்கபத்திரைக்குத் தெற்கே பல்லவராஜ்யம் அழிய, சோழர்கள் மேம்பட்டு மைசூரின்பாகமாகிய கங்கநாட்டின் ஒரு பகுதியைக் கைக்கொண்டு, அரசனின்றி ஆதரவற்றுக் கிடந்த வேங்கிநாட்டிலும் பிரவேசித்தார்கள். இனி, பின்சளுக்கியருக்கு முக்கியமான எதிரிகள் வடக்கில் பரமாரஅரசர்களும் தெற்கில் சோழர்களுமேயாவர்.

**தைலபன் (கி. பி. 973-997)**

நிஜபுஜசக்கரவர்த்தி என்றும், கரஹட கொங்கண பயங்கரனென்றும், ராஷ்டிரகூடருக்கு விஷம்போன்றவனென்றும், கூர்ஜரருக்கு ஜ்வரம்போன்றவனென்றும், மாளவதேசத்தரசனுக்குக் காலாக்கினியென்றும் தைலபன்சொல்லப்பட்டிருக்கிறான் [3]. ஆனால் அவன் ஆறுமுறை போர்க்களத்தில் மாளவதேசத்தரனாகிய வாக்பதிமுஞ்ச

1. Bom. Gaz. part. II. Ch. II.
2. Ind. Ant. XL. 24-44.
3. Ind. Ant. XL, 44. ரன்னகவியின் சளுக்கியவமிசாவளி.

ளுல் தோல்வியடைந்தானென்பது வேறுசில ஆதாரங்களால்[1] வெளியாகிறது. கடைசியாக முஞ்சன் கோதாவரியைக் கடந்து தைலபன் ராஜ்யத்திற்பிரவேசித்தபோது சிறைபிடிக்கப்பட்டு,கி.பி. 993-997-ல்[2] கொல்லப்பட்டான்[3]. முஞ்சனுக்குப் பிறகு மாளவதேசம் அவன் தம்பி[4] சிந்துராஜனுல் ஆளப்பட்டுவந்தது. அவன் வெகுநாள் ஆண்டதாகத் தெரியவில்லை. அவன் மகனுகிய போஜன் என்பான் தன் பெரிய தகப்பனுகிய முஞ்சனுக்குத் தைலபனுல் நேர்ந்த விபத்தை நினைந்து, பழிக்குப்பழி வாங்கவேண்டுமென்று நிச்சயித்து, தைலபனைப் பிடித்து மானக்கேடு உண்டுபண்ணிக் கடைசியில் அவனைக் கொன்றுவிட்டதாகவும் போஜசரிதத்திற் கூறப்பட்டிருக்கிறது. சாசனங்களிலோ[5] போஜன் இதர அரசர்களைத் துணைகொண்டு கர்நாடரைத்தாக்கி, கொங்கணத்தை ஜயித்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. கி. பி. 1055-ம் வருஷத்திய மாந்தாதா சாசனத்தில்[6] போஜனது திருவடியைத் தியானித்துக் கொண்டிருப்பதாகப் பரமார ஜயசிங்கன் சொல்லிக் கொள்ளுகிருன். காலஞ்சென்ற அரசர்களின் திருவடியைத் தியானிப்பதாகச் சொல்லிக்கொள்ளுவது அக்குலத்தர

---

1. மேருதுங்கனது பிரபந்தசிந்தாமணி; Ind. Ant. XXXVI. 169; Epi. Ind. I. 223; Bom. Gaz. IV. 432; V. A. Smith's Early History of India, 395.

2. ஜைனசாது அமிதகதி கி. பி. 993-ல் சுபாஷித ரத்ந சந்தோஹா என்னும் நூலை எழுதினுர். அதில் அப்போது மாளவத்தை முஞ்சன் ஆண்டு வந்ததாகச் சொல்லியிருக்கிருர்.

3. போஜசரித்திரம்; J.R.A.S. IV. 12; கடக்சாசனம், Ind. Ant. XXI. 168; Epi. Ind. II. 218; Bom. Gaz. IV. 430.

4. மாளவதேசத்தரசரின் பரம்பரை வரிசை, போஜசரிதத்தில் தவருகச் சொல்லப்பட்டிருக்கிறது. முஞ்சன் சிந்துராஜனது தமையனே அன்றித் தம்பியல்லன். அவனுக்கு முன் மாளவத்தை ஆண்டவன். இவ்விஷயமாக முஞ்ச போஜசாசனங்களையும் (Ind. Ant. VI. 14), நாகப்பூர்ப் பிரசஸ்தியும் (Epi. Ind. II), பத்மகுப்தனது நவசாஹசாங்க சரித்திரத்தையும், Ind.Ant. XXV-யும் பார்க்க. முஞ்சன் தமையன்மகனுகிய போஜனைக் கொன்று ராஜ்யத்தையடைய விரும்பினுன் என்பது ஆதாரமில்லாத ஒரு பொய்க்கதையேயாகும்.

5. உதயபூர் பிரசஸ்தி, Epi. Ind. I. 223-230 ; பான்ஸ்வாரா சாசனம், Ind. Ant. XLI. 201.

6. Epi. Ind. IV. 46-48.

சரின் வழக்கம். ஆகையால், கி. பி. 1055-க்கு முன்னமே போஜன் [1] இறந்திருக்கவேண்டுமென்பது தெளிவாகிறது. அவன் ஐம்பத்தைந்து வருஷம் மாளவதேசத்தை ஆண்டதாகப் போஜசரித்திரம் கூறுவதால் கி. பி. 997-ல் தைலபனைப் போஜன் கொன்றுமிருக்கலாம் [2].

தைலபனுடைய ராஜ்யத்தின் விஸ்தீரணத்தை ஒருவாறு நிச்சயிப்போம். சௌந்தத்தி ராட்டர்களும், வனவாசி சாந்தலிஜ் கிசுக்காட்டுச் சிற்றரசர்களும், கொங்கணதேசத்துச் சிலாஹாரர்களும், சேவுணதேசத்து யாதவர்களும் தைலபனது ஆளுகையின்கீழிருந்தனர். லாட (கூர்ஜர) தேசத்துத் தலைவனாகிய பாரப்பன், தைலபனால் அனஹில்வாத் குலத்து மூலபுருஷனாகிய மூலராஜனென்பவனுக்கு எதிரியாக அனுப்பப்பட்டதனால், கூர்ஜரமும் அவனாளுகைக்கு உட்பட்டிருந்தது [3]. தைபலன் திலிங்க கர்நாட தேசங்களின் தலைவனென்று மேருதுங்கனுடைய பிரபந்தசிந்தாமணியிற் சொல்லப்பட்டிருப்பதால் அந்நாடுகளும் இவன் ராஜ்யத்தைச் சேர்ந்திருத்தல்வேண்டும்.

அவனுடைய ராஜ்யத்தின் பிரதானநகரம் இன்னதென்று நிச்சயமாகத் தெரியவில்லை. முன்சளுக்கியராதுகாலத்தில் வாதாபிபுரம் தலைநகராக இருந்தது. ராஷ்டிரகூடராதுகாலத்தில் சார்வா என்னும் அமோகவர்ஷனது ஆளுகையில் மாணியகேடம் பிரதானபட்டண

1. டாக்டர் பூலர் (Dr Buhler) விக். சரி. முகவுரை, 23-ம் பக்கத்தில் போஜன் கி. பி. 1063-1065 வரையிலும் மாளவத்தை ஆண்டிருக்கலாம் என்றும், பில்ஹணகவி நேரில் அவனைப்பார்க்கவில்லை என்றாலும் இஷ்டப்படால பார்த்திருக்கக்கூடும் என்றும் சொல்லியிருக்கிறார். அதற்குப் பூலர்கூறும் ஆதாரம் விக். சரி. XIII-96-ம் சுலோகம். ஆனால் இச்சுலோகத்தில பில்ஹணர் போஜனைப்பார்க்கப்போனபோது, தாராநகரே அழுது கொண்டிருந்ததென்று சொல்லப்பட்டிருப்பதால, போஜன இறந்துவிட்டானென்றே அனுமானித்தலவேண்டும். அன்றியும் கவிகளைப் போஜனைப்போல் ஆதரிப்பவர் வட இந்தியாவில அப்போது இருநதிருந்தால் பில்ஹணகவி தக்ஷிணத்திற்கு வர நேர்ந்திராது.

2. ஸ்ரீமான். ரா. கோ. பண்டாரகர் (R. G. Bhandarkar) போஜனைகொலையுண்டவன் தைலபனது தம்பிமகனாகிய ஐந்தாம் விக்கிரமாதித்தன் என்று அபிப்பிராயப்படுகிறார் (Early History of Dekkan. 61). போஜசரித்திரத்தில் போஜன் தைலபனைக் கொன்றான் என்று வெளிப்படையாகக் கூறியிருப்பதை அவர் எக்காரணத்தால் நிராகரிக்கிறார் என்பது விளங்கவில்லை.

3. ராஸமாலா ; கீர்த்திகௌமுதீ.

மாக்கப்பட்டது [1]. ஆகையால் ராஷ்டிரகூடரின் ராஜ்யத்தைக் கைப் பற்றின தைலபனது நாளிலும் அதுவே ராஜதானியாக இருந்திருத் தல் கூடும் [2].

**சத்தியாசிரயன்**
**(கி. பி. 997-1008)**

தைபலனுக்குப்பின் அவன் மகன் சத்தியாசிரயன் ராஜ்யத்தை யடைந்து இரட்டபாடி ஏழரை இலக்கமுழுதும் [3] அரசாண்டான். அவனதுகாலத்தில் சோழர்களின் விரோதம்அதிகமாகி, புகழ்பெற்ற முதல்ராஜராஜன் இருமுறை இரட்டபாடியைத் தாக்கி, கங்கபாடி நுளம்பபாடிகளைக் கைப்பற்றினன் [4]. ஆனால் இவைகள் சில வருஷங்களுக்குள் சளுக்கியரால் மறுபடியும் ஜயிக்கப்பட்டன.

**ஐந்தாம் விக்கிரமாதித்தன்**
**(கி. பி. 1009-1014)**
**ஐயணன்**
**(கி. பி. 1014)**

சத்தியாசிரயன் மக்கட்பேறின்றி இறந்தமையால் அவனது சகோதரன் தசவர்மனது மக்களான ஐந்தாம் விக்கிரமாதித்தனும், ஐயணனும், ஜயசிங்கனும் ராஜ்யத்திற்கு முறையே உரியவராயினர். இவர் களுள் விக்கிரமாதித்தனும் ஐயணனும் சில வருஷங்களே ஆண்டார்கள்.

**ஜயசிங்கன்**
**(கி. பி. 1015-1042)**

பிறகு ஜயசிங்கன் சிங்காதனம் அடைந்தான். (முதல் ராஜராஜன் மகன்) ராஜேந்திரசோழனுகிய யானைக்குத் தான் ஒருசிங்கம்போன்றவனென்றும், சேர சோழ அரசர்களைப் பலமுறை கடலில் மூழ்க அடித்தவனென்றும் தன்சாசனங்களில்[5] சொல்லிக்கொள்ளுகிறன். சோழ சாசனங்களிலோ[6] ராஜேந்திரசோழன் ஜயசிங்கனிடமிருந்து (கிருஷ்ணு துங்கபத்திரைக்கிடையிலுள்ள) இடைத்துறை, வனவாசி, கொள்ளிப்பாகை முதலிய பல இடங்களைப் பிடித்துக்கொண்ட

1. கர்டா சாசனம், Ind. Ant. VI. 64; XII. 268; Bom. Gaz. IV. 430.
2. Epi. Ind. XIII. No. 15.
3. காரேபாடண்சாசனம், Bom. Gaz. IV. 431.
4. S. I. I. II. 13 ; Epi. Report. 1910; Leyden grant, Tanjore ins-n ; ஹொட்டூர்சாசனம், Bom. Gaz. IV. 433.
5. பல்காம்சாசனம், Epi. Car. VII. Sk. 125 ; மிராஜ் சாசனம், Ind. Ant. VIII. 18; Ind. Ant. V. 15.
6. S. I. I. I. 96-99; Epi. Ind. XII. 226.

தாகத் தெரியவருகிறது. இங்ஙனம் இருவரும் ஒருவரை ஒருவர் ஜயித்ததாகச் சொல்லிக்கொள்ளுவதனால் ஒருவராவது முடிவாகத் தோல்வி அடைந்தாரென்று நினைப்பதற்கிடமில்லை.

ஜயசிங்கன் கி. பி. 1019-ம் வருஷத்தியசாசனத்தில்[1] போஜனாகிய தாமரைக்குச் சந்திரனென்றும், போஜனையும் அவன் துணையரசர்களையும் தேடித் துரத்திப் பொடியாக்கினதாகவும் காணப்படுகிறது [2].

**ஆகவமல்லன் என்னும் முதலாம் சோமேசுவரன் (கி. பி. 1042-1068)**

கி. பி. 1042-ல் ஜயசிங்கன் இறக்க, அவன் மகன் மூதற் சோமேசுவரனாகிய ஆகவமல்லன்[3] ராஜ்ய பாரத்தை வகித்தான். அவன்காலத்தில் (நிஜாம் ராஜ்யத்துப் பீடர்ஜில்லாவைச்சார்ந்த) கலியாணபுரமானது பிரபலமடைந்து இராஜதானியாக்கப்பட்டது. இந்நகரம் கி. பி. 1054-ம் வரு

1. Ind. Ant. V. 17, டாக்டர் ப்ளீட், ரைஸ் இவர்கள் மொழிபெயர்ப்புத் தவறு.

2. டாக்டர் ஓஜா என்பவர் போஜனால் கொல்லப்பட்டவன் சளுக்கிய ஜயசிங்கனே என்று அபிப்பிராயப்படுகிறார் (History of the Solankis); இதற்கு அவருடைய முக்கியமான ஆதாரம், விக். சரி. I. 86. இந்திரனே அவனுக்குத் தன் கையால் மாலையிட்டதாகச்சொல்லியிருப்பதைக்கொண்டே, ஜயசிங்கன் போர்க்களத்தில் மடிந்தானென்று அவர் எண்ணுகிறார். ஆனால் அதற்கு அவன் ஒரு பெரிய வீரனாயிருந்து புகழொடுமாண்டு இந்திரலோகமடைந்தானென்பதே பொருளன்றி, போர்க்களத்தில் மடிந்தானென்று கொள்ள இடமில்லை. இப்பொருளுக்கு இதரமேற்கோள்களாவன: சாகுந்தலம் VII. 2; விக். சரி. VI & IV; Epi. Ind. II, நாகப்பூர்ச்சாசனம் ; புறநானூறு, 241 மோசியார் பாடலும் இதையே வலியுறுத்தும். அது வருமாறு:—

‘திண்டேர் இரவலர்க் கீத்த தண்டா
ரண்டிரன் வருஉ மென்ன வொண்டொடி
வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுட்
போர்ப்புறு முரசங் கறங்க
வார்ப்பெழுந் தன்றால் விசும்பி னானே’

3. இவன் பெரிய போர்வீரனாகையால் சோழசாசனங்களிலெல்லாம் ஆகவமல்லனென்றே சொல்லப்படுகிறான்.

ஷத்துச் சாசனத்தில் [1] 'நெலவீடு'[2] (பாசறை) என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதற்கு முந்திய சளுக்கிய ராஷ்டிரகூடசாசனங்களில் இப்பெயரே காணப்படவில்லை [3]; ஆகவே இது ஆகவமல்லனுற் புதிதாகக் கட்டப்பட்டதா அல்லது முன்னமே இருந்து அவனால் நெலவீடாக்கப்பட்டதா என்றகேள்விக்கு இடமுண்டாகிறது. இதைப்பற்றிப் பில்ஹணகவி[4] சொல்லியிருக்கும் சுலோகத்திற்கு இருவிதமாகவும் பொருள்படுகின்றதாகையால் ஒருதலையாகக்கூறுதல் இயலாததாகும்.

தன் முன்னோர் வழக்கப்படி ஆகவமல்லனும் சோழரை எதிர்த்துப்பொருதான். போஜராஜனது பிரதான பட்டணமாகிய தாராநகரைச் சேனையுடன் வளைத்துப் போஜனை அதைவிட்டோடச்செய்தான். தாஹலா (சேதி) ராஜ்யத்தையழித்து அதன்அரசனை கர்ணனை ஜயித்தான். கடற்கரையில் ஜயஸ்தம்பம் நாட்டி, அதைத்தடுக்க வந்த திராவிடஅரசனை முதுகிடச்செய்து சோழஅரசனது பிரதானநகராகிய காஞ்சியைத்தாக்கினான்[5]. சாசனங்களும் வேறு சில விவரங்களுடன் இவ்வாறே கூறுகின்றன. இவன் காலத்துச்சோழ அரசர்களாவார் கங்கைகொண்டசோழனென்னும் முதல்ராஜேந்திரசோழனுடைய கீர்த்திபெற்ற மக்களாகிய ராஜாதிராஜன் (கி. பி. 1018 - 1053), ராஜேந்திரதேவன் (கி. பி. 1052-1063), வீரராஜேந்திரன் (கி. பி. 1062-1070) என்பார். கி. பி. 1047-ம் வருஷத்துச் சாசனத்தால் [6] ராஜாதிராஜன் ஆகவமல்லனை ஜயித்து, (நிஜாம்ராஜ்யத்துச் சிகந்தராபாத்துக்கு நாற்பத்திரண்டுமைல் தூரத்திலுள்ள) கொள்ளிப்பாகையை எரியூட்டி, (பல்லாரி ஜில்லா ஹொஸ்பெட்தாலூக்காவைச் சேர்ந்த) கம்பிலித்தோட்டத்தையும் அரண்மனையையும் அழித்து ஜயஸ்தம்பம் நாட்டினான் [7] என்பது அறியலாகும். இவற்றுடனில்லாமல் ராஜாதிராஜனும் இளவரசாகிய ராஜேந்திரதேவனும்

---

1. கேம்பாவி சாசனம், Bom. Gaz. IV. 440.
2. J. R. A. S. 1917. 117.
3. Bom. Gaz. IV. 427.
4. விக். சரி. II. I.
5. விக். சரி. I; நாகவிசாசனம், J. R. A. S. IV. 13; மிராஜ்சாசனம், Ind. Ant. VIII.
6. S. I. I. III. 56.
7. "கம்பி லிச்சயத் தம்ப நட்டதுங் கடிய ரண்கொள்கல் யாணர் கட்டறக் கிம்பு ரிப்பணைக் கிரியுகைத்தவன்"—கலிங்கத்துப்பரணி, VIII. 26;

இரட்டமண்டலம் புகுந்து பிரதான நகராகிய கலியாணபுரத்தைக் கைப்பற்றி, கொல்லாபுரத்தில் (கொல்ஹாபூர்) ஒரு ஜயஸ்தம்பம் நாட்டினார்கள். வீரனாகிய ஆகவமல்லன் இவ்வவமானங்களைப் பொறாமல் பேராற்றங்கரையிலுள்ள (கிருஷ்ணாநதி) 1 கொப்பத்துச்சண்டைக்கு அழைத்தான். அங்கே, கி. பி. 1053-1054-ல் 2 ஒரு கடுஞ் சண்டை நடந்தது. அதில் ஆகவமல்லன் ஒரு மதயானையின்மேல் ஏறிக்கொண்டு அம்பெய்து ராஜாதிராஜன் தலையைக்கொய்தான் 3. உடனே ராஜேந்திரதேவன் 'ஒருக ளிற்றின்

"………முப்மடிபோய்க் கலியாணி
செற்ற தனியாண்மைச் சேவகனும்"—விக்கிரமசோழனுலா, 19.

கும்பகோணத்துக்கடுத்த தாராசுரத்தில் விஜயராஜேந்திரதேவனால் கலியாணபுரத்திலிருந்து கொண்டு வரப்பட்ட விக்கிரகம் ஒன்று இருக்கிறது.

1. மணிமங்கலசாசனத்தில் (S. I. I. III. 68. No. 30) 'விஜயவாடையோடடுத்த பேராறு' எனக் காணப்படுவதால், பேராறு பெஜவாடாவையடுத்த கிருஷ்ணாநதி என்று விளங்குகிறது ; கலிங்கத்துப்பரணியும் இதையே வற்புறுத்தும் :—

'பாலாறு குசைத்தலை பொன்முகரிப் பழவாறு கடந்தெறி கொல்லியெனு
நாலாறு மகன்றொரு பெண்ணையெனு நதியாறுக டந்து நடந்துடனே'
'வயலாறு கடந்து மணிப்புனல்வாய் மண்ணாறு வயங்கெழு குன்றியெனும்
பெயலாறு பரந்து நிறைந்துவரும் பேராறு மிழிந்தது பிற்படவே'
'கோதா வரிநதி மேலாறொடுகுளிர் பம்பா நதியொடு சந்தப்பே
ரோதா வருநதி யொடுகோ தமையுட னெல்நீர் மலிதுறை பிறகாக'

XI. 55, 56, 57.

பேராறு, துங்கபத்திரை பாலாறு முதலியனவாகா (Epi. Ind. XII. 297). கிருஷ்ணாநதிக்கரைக் கொப்பை அக்காலத்தில் ஒரு விசேஷமான க்ஷேத்திரமென்பது, ஏவூர்ச்சாசனத்தாலும் (Epi. Ind. XII. 297), 'செப்பருந் தீர்த்தக் கொப்பத்து' (S. I. I. III. 603), 'செப்பமா தீர்த்தக்கொப்பத்து' (Epi. Car. IX. 108) என்பனவற்றாலும் விளங்கும்.

2. ராஜாதிராஜனுடைய கடைசிச் சாசனத்தின் காலம் கி. பி. 1053 மேமீ 23உ ஆகும் (Epi. Ind. VI. 22). அவனிறந்ததாக, கி. பி. 1054 மேமீ சாசனத்தில் (Epi. Car. VII. Sk.118) காணப்படுகிறது. ஆகையால் கொப்பத்துச்சண்டை கி. பி. 1053-1054க்குள்ளாக நடந்திருத்தல் வேண்டும்.

3. Epi. Car. VIII. Part. II. Sb. 325; Epi. Car. Sk. 118; அண்ணிகேர்சாசனம், Bom. Gaz. IV. 441; S. I. I. III. 39.

மேல் வருக ளிற்றையொத் துலகு யக்கொளப் பொருது கொப்பை யிற், பொருக ளத்திலே முடிக வித்து'[1] அபஜயம் நேரிடாமற் காத்தான். சில வருஷங்களுக்குப் பின்னர் ஆகவமல்லன் ராஜேந்திரதேவனை எதிர்த்துச் சோழநாட்டிலும் பிரவேசித்தான். 'கலியாணபுரமுங் கொல்லாபுரமுங் கொண்டருளி **ஆனைமேல் துஞ்சியருளிய**[2] பெருமாள் விஜயராஜேந்திரதேவன்' என்று சோழசாசனத்தில்[3] காணப்படுவதால் ராஜேந்திரதேவனும்[4] சளுக்கியரோடு நேர்ந்த சண்டையில் ஒருகால் உயிரிழந்திருக்கக்கூடும். இவ்வாறு தன் முன்னோர்காலமுதலாக ஏற்பட்டிருந்த சண்டைகளிற் சிறிதும் பின்வாங்காமல் ஆகவமல்லன் முயன்று, தன்னாட்டைப் பாழ்படுத்திய சோழர்களைத் துரத்தித் தன்பெயரை நிலைநாட்டினான்.

---

1. கலிங்கத்துப்பரணி, ராஜபாரம்பரியம், VIII. 27 ;
'வெப்பத் தடுகளத்து வேழங்க ளாயிரமுங்,
கொப்பத்தொருகளிற்றாற் கொண்டோனும்.' விக்கிரமசோழனுலா, 20.

2. 'துஞ்சிய' என்பது 'இறந்த' என்னும் பொருளில் மங்கலவழக்கு. 'ஆனைமேல்துஞ்சிய' என்பதற்கு, 'போர்க்களத்தில் மடிந்த' என்று பொருள்.

3. சுடிசாசனம், Bom. Gaz. IV. 441; ஆலங்குடிசாசனம், Epi. Rep. 1898-1899; S. I. I. III. 191; No. 87 of 1895, Epi. Rep. திருமலவாடிசாசனம்.

4. இவ்விஜயராஜேந்திரதேவன் ராஜேந்திரதேவனல்லன்; ராஜாதிராஜனே என்று ராவ்பகதூர் வெங்கையரவர்கள் (Epi. Rep. 1908) அபிப்பிராயப்படுகிறார்கள். ஆனால் இதற்கு இரண்டு முக்கியமான ஆக்ஷேபங்கள் எழுகின்றன. சாசனங்களில் விஜயராஜேந்திரதேவன் பரகேசரி என்று சொல்லப்பட ராஜாதிராஜன் ராஜகேசரி என விளங்குகிறான். மேலும் சகசகாப்தம், 981. அஃதாவது கி. பி. 1057-ம் வருஷத்தில் பெத்ததிப்ப சமுத்திரத்தில் விஜயராஜேந்திரதேவனுடைய சாசனமொன்று (534 of 1906. Epi Rep) உளது. ராஜாதிராஜன் கொப்பத்துக்களத்து 1053-1054ல் இறந்ததாக முன்னமே நிரூபிக்கப்பட்டுள்ளது; (பக். 13 : 2-ம் குறிப்புப் பார்க்க.) ஆகையால் மேலேகண்ட விஜயராஜேந்திரதேவன் தமையன் இறக்க, 'கொப்பையிற்பொருகளத்திலே முடிகவித்து' விஜயாபிஷேகம்செய்த ராஜேந்திரதேவனே ஒழிய ராஜாதிராஜனாகான்.

# இரண்டாம் அத்தியாயம்.

## விக்கிரமாதித்தனது இளமையும் போர்த்திறமும்.

**விக்கிரமாதித்தனது பிறப்பு.**

ஆகவமல்லன் இவ்வாறு ஜயங்கொண்டு மகிழ்ந்திருந்தபோதிலும் மக்கட்பேறில்லாப் பெருங்குறையொன்று அவனைப்பிடித்துத் துயர்க்கடலில் வீழ்த்திற்று. முன்னோரிடமிருந்து முறையேவந்த ராஜ்ய லக்ஷ்மியும் அவனுக்குப்பின் பற்றுக்கோடின்மையால் ஏக்கமுற்று, கடலிடையே கப்பலின் பாய்மரத்திற்றங்கிய பறவைபோலத் தத்தளித்துக்கொண்டிருந்தாள். ஆகையால், ஆகவமல்லனும் தன் ராஜ்யத்தை அமைச்சரிடம் ஒப்பித்துத் தங்கள் குலதெய்வமாகிய சிவபிரானுடைய பிரசாதத்தால் மக்களையடைய விரும்பித் தன் மனைவியுடன் எல்லா ஆடம்பரங்களையும் ஒழித்துக் கோயிலுக்குச் சென்று வரங்கிடந்தான். சிவபிரானும் திருவுளமுவந்து முன் தோன்றி "உங்களுக்கு மூன்றுமக்கள் பிறப்பார்கள்; அவர்களில் இரண்டாவது புத்திரன் எமது முழுக்கருணையைப்பெற்று, குணம் பராக்கிரமம் முதலியவைகளில் பண்டையரசர்களெல்லோரினும் மேம்பட்டவனாக விளங்குவான்" என்று அருள்புரிந்தார். அவ்வாறே அரசியும் நாளடைவில் சோமேசுவரன் விக்கிரமாதித்தன் ஜயசிங்கனென்னும் மூன்றுமக்களை முறையேபெற்றுக் களிகூர்ந்தனள். தேவரெல்லாம் மகிழ்ச்சியடைந்து அலர்மழை பொன்மழை பொழிந்தனர்.

இவ்வாறு பில்ஹணகவி [1] சொல்லியிருப்பதிலிருந்து ஆகவமல்லன் அரசுபுரியத்தொடங்கிப் (கி. பி. 1042) பலவருஷங்களுக்குப் பின்னரே அவனுக்கு மக்கள் பிறந்தார்களென்று அனுமானிக்க இடமுண்டாகிறது. இது சரித்திரசம்மதமாகுமா? சாசனங்களின் [2] உதவியால் சீர்தூக்கிப்பார்த்தால் இதை அங்கீகரிப்பது கூடாததாகிறது. கி. பி. 1053-லேயே பெலுவோலா, புலிகிர் நாடுகள் மூத்த குமாரனான சோமேசுவரனுடைய அதிகாரத்தின் கீழும், கி. பி. 1055-ல் கங்கபாடி, வனவாசி, சாந்தலிஜ், நுளம்பபாடி மாகாணங்கள் இரண்டாம் குமாரனான விக்கிரமாதித்தன் ஆட்சியிலும் இருந்தன.

---

1. விக். சரி. II. 25-91.

2. Bom. Gaz. IV. 440; Epi. Car. VII. Sk. 11. 83, 152; Ind. Ant. IV. 303. முல்குண்டு சாசனம்.

ஆகவமல்லன் தன் ராஜ்யத்தின் எல்லையிலிருந்த முக்கிய மாகாணங்களை மக்கள்வசத்தில் விட்டிருந்ததனால் அவர்கள் அப்போதே உரிய பிராயமடைந்து ஆளுந்திறமையும் பெற்றிருத்தல்வேண்டும். ஆகையால், ஆகவமல்லன் பட்டத்திற்கு வருமுன்னமே (கி. பி. 1042) அவர்கள் பிறந்திருத்தல் வேண்டுமென்று எண்ண இடமுண்டாகிறது. இதனைத் துணிந்துரைக்கவும் கூடும்; ஏனெனில் சோழவமிசத்து ராஜாதிராஜனது இருபத்தொன்பதாம்ஆண்டு சாசனத்தில்[1] (கி. பி. 1047) இவ்விக்கிரமாதித்தனே 'திண்டிறல் விருதர் விக்கி' என்று சொல்லப்பட்டிருக்கிறான். அவன் சண்டைசெய்யும் வன்மையுடையவனாயிருந்ததோடு விரோதிகளாலும் புகழப்பட்டவனாயிருந்தமையால் அப்போது அவனுக்குக் குறைந்தது பதினாறு வயதாகிலும் இருந்திருத்தல்வேண்டும். எனவே, சற்றேறக்குறைய கி. பி. 1031-லேயே விக்கிரமாதித்தன் பிறந்திருத்தல்வேண்டும். அதற்கு இரண்டு மூன்றுவருட முன்னரே தமையனாகிய சோமேசுவரன் ஜனித்தானென்பது சொல்லாமலே அமையும். ஒருகால் மூன்றாம்மகனாகிய ஜயசிங்கன்மட்டும் ஆகவமல்லன் அரசெய்தியபின்னர் பிறந்திருக்கலாம்; ஏனெனில் அவன்பெயர் கி. பி. 1063-ம் வருஷத்திய சாசனத்தில்[2] முதல்முதல்காணப்படுகிறது.

உண்மை இங்ஙனமிருக்க, பில்ஹணகவி மாறுபாடாகக் கூறியதற்குக் காரணமென்ன? புகழ்பெற்று விளங்கிய விக்கிரமாதித்தனை ஈசுவரானுக்கிரகம் பெற்றவனென்று சிறப்பித்து உரைப்பதற்கே போலும்; நிற்க,

இம்மூன்று புத்திரரும் ஒருதாய்வயிற்றிற் பிறந்தவரா அல்லரா என்ற கேள்வி எழுகின்றது. சோமேசுவர விக்கிரமாதித்தரது கங்கபிருதுகளால் அவர்கள் கங்கவம்சத்தரசியின் பிள்ளைகளென்றும், ஜயசிங்கனுடைய பல்லவபிருதுகளால் அவன் பல்லவகுலத்தரசியின் புத்திரனென்றும் ஆகவே மூவரும் இருவேறுதாய்களின் மக்களாக இருத்தல் வேண்டுமென்றும் டாக்டர் ரைஸ்[3]

1. S. I. I. III. 56.

2. S. I. I. III. No. 20. கருவூர்ச்சாசனம்; Epi. Rep. 113. A. of 1896; திருவெண்காட்டுச்சாசனம்; வீரராஜேந்திரனது இரண்டாம்வருஷம் (கி. பி. 1063).

3. Epi. Car. VII. Sk. 136; Dg. 133; Cd. 12.

(Dr Rice) அபிப்பிராயப்படுகிறார். ஆனால் இவ்வபிப்பிராயத்துக்குச் சிறிதும் இடமில்லை. கங்கமாகாணங்களின் எல்லையைப் பாதுகாத்து வந்தமையாற் கங்கபிருதுகளும், பல்லவதேசத்தெல்லையைப் பாதுகாத்துவந்தமையாற் பல்லவபிருதுகளும் கிடைத்திருத்தல்வேண்டும். இத்தகையவழக்கம் சோழர்களிடத்திலும்[1] மிகுதியாகக் காணப்படுகிறது. மேலும், விக்கிரமாங்கதேவசரிதத்தில்[2] 'அரசே! இம்மனைவியின்வயிற்றில் மூன்று மக்களுண்டாவர்' என்று சிவபிரான்சொன்னமை வெளிப்படையாகக் கூறப்பட்டிருக்கின்றது. டாக்டர் ப்ளீட் (Dr Fleet) வெளியிட்ட கடக்சாசனத்திலிருந்தும்[3] மூவரும் ஆகவமல்லன் மூத்தமனைவியாகிய பாசலதேவியின் புத்திரரென்று தெரிகிறது. ஆகையால் இவர்கள் சகோதரரேயன்றி வேறல்லர் என்பது துணியப்படும். இப்பாசலதேவி, பல்லவகுலத்தைச் சேர்ந்தவளாக இருத்தல்வேண்டுமென்று தேவூர்ச்சாசனத்தைக்கொண்டு[4] ஒருவாறு ஊகிக்கலாம்.

**சோமேசுவரன் இளவரசாதல்.**
(கி. பி. 1045)

புத்திரர்கள் பலகலைகளையும் பயின்று பருவமுதிர்ந்தகாலையில், முன்னோர் வழக்கப்படி ஆகவமல்லன் தான் அதுகாறும் வகித்துவந்த ராஜ்யபாரத்தை ஒருவாறு குறைத்துக்கொள்ளுவதற்கும், அரசாளு முறைமையில் மைந்தர்களைப்பழக்குவதற்கும் வேண்டித் தன் புதல்வரில் ஒருவனை இளவரசாக்க எண்ணினான். மூத்தகுமாரனை சோமேசுவரன் இளவரசுக்குரியனாயிருந்தபோதிலும், அவன் தம்பி விக்கிரமாதித்தன் தமையனைக்காட்டிலும் புஜபலபராக்கிரமங்களில் மேம்பட்டவனாயிருந்தமையால் ஆன்றோரொழுக்கமும்உரிமையுமொருபுறமிருக்க, தன் மனப்போக்கும் பொருத்தமும் மற்றொரு புறமாக, ஆகவமல்லன் இன்னதுசெய்வதென்று தோன்றாமற் குழப்பமடைந்திருந்தான். இக்குழப்பத்தை ஊகித்தறிந்தவிக்கிரமாதித்தன், தமையனிருக்கத் தான் இளவரசாதல் தனக்கும் தன் தந்தைக்கும் சளுக்கியகுலத்துக்கும் பெரும்பழியாகுமாதலால் கூடாதென்றும், யுவராஜபட்டமில்லாமலே தன்னாலியன்ற ஊழியம்புரிவ

1. S. I. I. III. Nos, 20, 29.
2. விக். சரி. II. 51.
3. Ind. Ant. II. 297; Bom. Gaz. 438.
4. Bom. Gaz. 440.

தாகவுஞ் சொன்னான். ஆகவே சோமேசுவரன் இளவரசாக நியமிக்கப்பட்டான்.

இங்ஙனம் இளவரசுவிஷயத்தைப்பற்றிப் பில்ஹணர்[1] கூறியது, விக்கிரமாதித்தனைப்புகழ்ந்து சோமேசுவரனை இகழ்தலாகிய பக்ஷபாதமுடைத்தென்று டாக்டர் பூலர் (Dr Buhler)[2] அபிப்பிராயப்படுகின்றார். ஆனால், இதில் அதிக பக்ஷபாதம் இல்லையென்பது பிற்காலத்தில் இவர்கள் அரசுநடத்திய சீர்மையாலேயே யாவர்க்கும் தெற்றெனவிளங்கும். இது நிற்க, ஆகவமல்லன் பிரிய சுதனாகிய இளையவனை இளவரசாக்க உண்மையிலே விரும்பினானா அல்லது பில்ஹணகவி சாதுரியமாகச் சகோதரரின் ஏற்றத்தாழ்வை எடுத்துக்காட்ட இவ்வாறு புனைந்துரைத்தாரா என்ற கேள்வி எழுகின்றது ராஜ்யத்தின்பொருட்டாக நெடுங்காலம்பிரயாசைப்பட்டு அதன் அபிவிருத்தியையே நாடின ஆகவமல்லன், வல்லமைவாய்ந்த இளையவனையே இளவரசாக்க இசைந்திருப்பானென்பது ஒருகாலும் அசம்பாவிதமாகாது. ஆகவமல்லன் கருதியதுண்மையாயின் விக்கிரமாதித்தன் மறுத்ததும் உண்மையேயாம்; ஏனெனில் ஆகவமல்லனது காலமுழுதும் சோமேசுவரனே யுவராஜனாக இருந்து, தந்தைக்குப்பின்[3] முறைமையிற் சிங்காதனமேறினான். ராஜ்யவுரிமைக்குச் சகோதரர் சண்டையிட்டே தீரவேண்டுமா? [4]

---

1. விக். சரி. III. 26 - 59.

2. பூலர்பதிப்பு, விக். சரி. முகவுரை. 31.

3. பக்கம், 29. பார்க்க.

4. Cf. "வெள்ளிச் சாலையின் வேந்தன் பெயர்ந்தபி
னியானுஞ் சென்றே னென்னெதி ரெழுந்து
தேவந் திகைமேற் றிகழ்ந்து தோன்றி
வஞ்சி மூதூர் மணிமண் டபத்திடை
நுந்தை தாணிழ லிருந்தோய் நின்னை
யரசுவீற் றிருக்குந் திருப்பொறி யுண்டென்
றுரைசெய் தவன்மே லுருத்து நோக்கிக்
கொங்கவிழ் நறுந்தார்க் கொடித்தேர்த் தானைச்
செங்குட் டுவன்றன் செல்ல னீங்கப்
பகல்செய் வாயிற் படியோர் தம்மு
னகலிடப் பார மகல நீக்கிச்

**தந்தைக்குத் துணையாக விக்கிரமாதித்தன் காட்டியபோர்த் திறம். (கி. பி. 1047-1068)**

சோமேசுவரன் இளவரசனுலும் ராஜ்யபாரத்தைப்பெரும்பாலும் விக்கிரமாதித்தனே வகித்துவந்தான். எல்லாச்சண்டைகளுக்கும் அவனையே ஆகவமல்லன் அனுப்பினன். பலமுறை சோழனைப் புறங்காட்டச்செய்து தென்கடற்கரைவரையில் வந்து மலயமலையைக் கைக்கொண்டு, தன்னிடமடைக்கலம்புகுந்த மாளவ அரசனுக்கு அவனுட்டை மீட்டளித்து, கௌட (வங்காளம்) காமரூப (அஸ்ஸாம்) தேசங்களுக்குச்சென்று கிழக்குத்தொடர்ச்சிமலையைக்கடந்து காஞ்சியைத்தாக்கி மலையவனத்தையழித்துக் கேரளஅரசனைத் தோற்கச்செய்து சோழராஜதானியாகிய கங்கைகொண்டசோழபுரத்தைக் கைப்பற்றி, வேங்கிக்கும் சக்கரக்கோட்டத்திற்கும் சென்று கிருஷ்ணுநதிக் கரைக்கு விக்கிரமாதித்தன் திரும்பிவருகையில் தந்தை ஆகவமல்லன் இறந்தசெய்தியைக்கேட்டானென்று பில்ஹணகவி[1] வருணித்திருக்கிறர்.

சற்றேறக்குறைய இருபதுவருஷங்களடங்கிய (கி. பி. 1047-1068) மேற்கண்டவரலாற்றின் காலவொழுங்கை நிர்ணயிப்பது இயலாதென்று டாக்டர் பூலர் கருதியபோதிலும்[2] பின் வெளிவந்த சோழசாசனங்களைக்கொண்டு ஒருவாறு நிச்சயித்தல்கூடும்.

**முதன்முறை சோழனைத் தாக்கியது. (கி. பி. 1047)**

முதன்முறை சோழநாடு மலயநாடுகளில் விக்கிரமாதித்தன் கி. பி. 1047-ல் பிரவேசித்தான். இதுவு அவ்வருஷத்திய ராஜாதிராஜனுடையசாசனத்தில்[3] உள்ள 'திண்டிறல் விருதர் விக்கி' என்பதனல் அறியக்கிடக்கின்றது.

---

சிந்தை செல்லாச் சேணெடுந் தூரத்
தந்தமி லின்பத் தரசாள் வேந்தென்
றென்றிற முரைத்த விமையோ ரிளங்கொடி
தன்றிற முரைத்த தகைசா லன்மொழி
தெரிவுறக் கேட்ட திருத்தகு நல்லீர்''

சிலப்பதிகாரம், 30. 170-185.

"குணவாயிற் கோட்டத் தரசுதுறந் திருந்த
குடக்கோச் சேர லிளங்கோ வடிகட்கு''—பதிகம், 1-2.

1. விக். சரி. III & IV.
2. பூலர்பதிப்பு. விக். சரி. முகவுரை, 31.
3. S. I. I. III. 56, No. 28.

**மாளவ அரசனுக்குச் செய்த உதவி. (கி. பி. 1054)**

விக்கிரமாதித்தனுடைய உதவியால் ராஜ்யத்தையடைந்ததாகப் பில்ஹணர் கூறியிருக்கும் மாளவஅரசன் யாவன்? அவ்வரசன் எப்போது எக்காரணத்தைக் கொண்டு விக்கிரமாதித்தனது உதவியைநாடினன்? போஜன் புத்திரனின்றி, கி. பி. 1055-க்கு முன்னம் இறந்ததும் அக்காலத்துப் பிரபலவீரனும் சேதிதேசத்தரசனுமாகிய கர்ணன், கூர்ஜரதேசத்தரசனான பீமதேவனுடன்சேர்ந்து மாளவதேசத்தையெதிர்த்து, தாராநகரத்தை இருபுறமுந்தாக்கிவிளக்கவே[1] போஜனது உறவினனாகிய ஜயசிங்கன் தன்னந்தனியனாய் நாட்டைக்காப்பாற்றச் சக்தியில்லாமல் ஆகவமல்லனைத் தனக்கு உதவி புரியவேண்டினன். ஆகவமல்லனும் மாளவதேசத்திற்கு விரோதிகளான சேதி கூர்ஜர அரசர்கள் ஒன்று சேர்ந்தால் தன் நாட்டின் வடஎல்லைக்கு நாளடைவில் பலக்குறைவாகுமென்றெண்ணிச் சேதி நாட்டைத்தாக்க, கர்ணன் மாளவத்தினின்றும் பின்னடைந்தான். ஆகவமல்லன் தன்மகன் விக்கிரமாதித்தனையும் மாளவத்திற்கனுப்ப, அவன் கர்ணனுக்கு எதிராக ஜயசிங்கன் பக்கத்திலிருந்து அதுவரையிற் போர்புரிந்துவந்த உதயாதித்தனோடு[2] சேர்ந்து ஜயசிங்கனை மாளவத்தில் நிலைநிறுத்தினன். ஜயசிங்கன் இறந்தபின் உதயாதித்தன் மாளவத்தையாண்டான்.

**கௌடகாமரூபங்களுக்குச்சென்றது.**

விக்கிரமாதித்தன் இவ்வாறு மாளவத்திலிருந்து திரும்புகையில் கௌட காமரூப தேசங்களுக்கும் சென்றிருக்கலாம்.

**இரண்டாமுறைசோழனைத்தாக்கியது. (கி. பி. 1064)**

கி. பி. 1053-1054 ல் சோழருக்கும் சளுக்கியருக்கும் கொப்பத்தில்நடந்த கடுஞ்சண்டையில் ராஜாதிராஜன் கொல்லப்பட, அவன் தம்பியாகிய ராஜேந்திர தேவன் 'பொருகளத்திலே முடிகவித்து' கி. பி. 1062 வரையில் அரசாண்டுவந்தான் என்று முன்னமே[3] சொல்லியிருக்கிறோம்.

---

1. உதயபூர்பிரசஸ்தி, Epi. Ind. I; மேருதுங்கனது பிரபந்தசிந்தாமணி.

2. Epi. Ind. II. 192, நாகப்பூர்ச் சாசனம்; 303, காசிச்சாசனம்; பில்ஹணர் கூறுவதற்கு மாறாக இச்சாசனங்களில சளுக்கியர் உதயாதித்தனுக்கு விரோதமாய்ச் சேதிகர்ணனைச் சேர்ந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

3. பக்கம், 14-பார்க்க.

அவன்மகன் ராஜமகேந்திரனைப்பற்றி அதிகமாக ஒன்றுந்தெரிய வில்லை. ஆனால், கலிங்கத்துப்பரணியில்[1]

பனுவலுக்கு முதலாய வேத நான்கிற் பண்டுரைத்த நெறிபுதுக்கிப் பழையர் தங்கண்
மனுவினுக்கு மும்மடிநான் மடியாஞ் சோழன்' என்றும்,

விக்கிரமசோழனுலாவில் [2],

'பாடரவத் தென்னரங்க மேயாற்குப் பன்மணியா
லாடரவப் பாய லமைத்தோனும்' என்றும் முறையே சிறப்பித்துக்கூறப்பட்டவன் இவனே.

பிறகு ராஜேந்திரதேவன் தம்பியாகிய வீரராஜேந்திரன் கி. பி. 1063-ல் [3] சிங்காதனமேறினான். இவன், கொப்பத்தில் ராஜாதி ராஜன் கொலையுண்டமையால் சளுக்கியரைப் பழிக்குப்பழி வாங்க வேண்டுமென்ற நோக்கமுடையவனாயிருந்தான். அதையறிந்து ஆகவமல்லனும் வீரனை தன்மகன் விக்கிரமாதித்தனைச் சோழ நாட்டெல்லையைச்சார்ந்த கங்கபாடி, வனவாசி, சாந்தலிஜ், நுளம் பபாடி மாகாணங்களுக்கு அதிகாரியாக நியமித்திருந்தான் [4]. வீர ராஜேந்திரன் கி. பி. 1064-ல் 'இகல்விளை, விருதொடு மலைக்கும் விக்கலன் றன்னொடும், வெஞ்சிலைத் தடக்கை மாசா மந்தரைக்கங்க பாடிக் களத்திடை நின்று, துங்கபத் திரைபுகத் துரத்தினன்' [5]. இது சோழவீரராஜேந்திரனுக்கும் சளுக்கி ஆகவமல்லனுக்கும் நடந்த முதற்போராகும். இரண்டாமுறை வீரராஜேந்திரன் 'வேங்கைநன் னாட்டிடை மீண்டவர் விட்ட, தாங்கரும் பெருவலித் தண்டுகெடத் தாக்கி, மாதண்ட நாயகன் சாமுண்ட ராயனைச், செற்றவன் சிரத் தினை யறுத்தனன்.' மூன்ருமுறை வீரராஜேந்திரன் ஆகவமல்லனோ டும் அவன் புத்திரரோடும் மகாசாமந்தர்களோடும் கிருஷ்ண பஞ்ச கங்கா நதிகள் கூடுமிடமாகிய (Epi. Ind. XII. 298) கூடல்சங்கமத்

1. VIII. 28. 2. பாடல், 21.

3. Epi. Ind. IX. 207. Note Prof. Kielhorn's astronomical calculations.

4. Ind. Ant. IV. 203; Epi. Car. VII. Sk. 11, 83, 152.

5. S. I. I. iii. No. 20 கருவூர்ச்சாசனம்; Epi. Rep. 113 of 1896.; திருவெண்காட்டுச்சாசனம், வீரராஜேந்திரனது இரண்டாம் வருஷம் (கி. பி. 1064).

